28th September 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மைக் உபயோகிப்பதில், யார் அங்கே கேட்பதற்காக வீற்றிருக்கிறார்களோ அவர்கள் காதில் மட்டும் சத்தம் போவதானால் பரவாயில்லை. தெருவிலுள்ள எல்லோருக்கும் கேட்கிறது, எல்லோருக்கும் பெரும் தொல்லையாக இருக்கிறது. ஆகவேதான் சில நிபந்தனைகள் போட வேண்டியிருக்கிறது. அது எல்லோருக்கும் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும். 10 மணி வரைக்கும் என்றால், மற்றவர்கள் அதற்குப் பிறகாவது தூங்கவேண்டும் என்பதற்காகத்தான் சில சமயங்களில் இது தளர்த்தவும் படுகிறது.

SRI N. K. PALANISAMI : இப்பொழுது பர்மிஷன் வாங்க ஐந்து நாட்களுக்கு முன் அப்ளை செய்ய வேண்டும் என்று இருக்கிறது. பொதுத்தேர்தலை முன்னிட்டு, உடனுக்குடன் கொடுக்கும் அளவுக்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பொதுத் தேர்தல் பற்றி, தளர்த்துவதுபற்றி யோசனைகள் கூறும் வகையில், தனிக் கேள்வி போட்டால் அடுத்த கூட்டத்தில் பதில் சொல்லலாம்.

*Industrial estate for Udayarpalayam*

* 1890 Q.—SRI S. RAMALINGA PADAYACHI : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் உடையார்பாளையம் தாலூகாவில் தொழிற்பேட்டைகள் எவையேனும் எங்கேயாவது ஏற்படுத்த உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

SRI S. RAMALINGA PADAYACHI : கனம் அமைச்சர் அவர்கள் உடையார்பாளையத்தில் தொழில் பேட்டை ஒன்றை அமைக்க முடியாது என்று பதில் சொன்னார். அது ரொம்பவும் பிற்பட்ட பகுதி. எந்த விதத்திலும் வளர்ச்சி அடையாத பகுதி அது. அங்கு தொழில் பேட்டை அமைக்க வேண்டியது ரொம்பவும் அவசியம். ஆதலால் அங்கு தனியார் துறையிலாவது அல்லது சர்க்கார் துறையிலாவது ஒரு தொழிற் பேட்டையை அமைக்க இந்த அரசாங்கம் ஏதாவது வழி வகை செய்வார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தொழில் பேட்டை வைப்பது என்பது கடையில் வாங்கிச் சாப்பிடுவதுபோல் அன்று. தொழில் பேட்டை வைப்பதாக இருந்தால் அதை வைப்பதற்குவேண்டிய இடம், மற்றும் வசதிகள் எல்லாம் இருக்கவேண்டும். இப்பொழுது திருச்சியில் வைக்கப்பட்டிருக்கிறது. மற்ற இடங்களிலும் வைக்கப்பட்டிருக்கிறது. பிற்போக்கான இடமாக இருந்தால் மட்டும் போதாது. அதை வைப்பதற்கு வேண்டிய மற்ற எல்லா வசதிகளும் இருக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அதில் சர்க்கார் இப்பொழுது கவனம் செலுத்திக் கொண்டு தான் வருகிறது.

***Sugarcane (price)***

* 1890-A Q.—SRI S. M. ANNAMALAI: கனம் உள்துறை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கரும்பின் விலையைக் குறைக்கவேண்டுமென்று மத்திய சர்க்காரை மாநில சர்க்கார் கேட்டுள்ளார்களா ?

(இ) சர்க்கார் நிர்ணயித்திருக்கும் விலையைவிட குறைந்த விலையில் விவசாயிகள் கரும்பு தருவதற்கு முன்வருகிறார்கள் என்பது உண்மையா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) No, Sir.

(இ) No, Sir.